

மகா சந்நிதானம் ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மகா சுவாமிகள்

# அத்வைத அருள் ஜோதி
# ஸ்ரீ சங்கர பகவத்பாதர்

21-5

சக்திதாசன் சுப்பிரமணியன்

ஜலஜா சக்திதாசன் எம்.ஏ.பி.டி.

சங்கீத சிரோமணி




வெளியீடு

ஸ்ரீ சிர்ங்கேரி ஸ்ரீ சாரதா பீடம்

சிர்ங்கேரி—கர்நாடக ராஜ்யம்

விலை ரூ. 1—50

சேவகன் மெய்யம்மை

21-5

# நாம் யார்?

இந்து என்று நம்மை அழைக்கிறார்கள். இந்து மதம் என்று நமது மதத்தைச் சொல்கிறார்கள். நாமும் அதை ஏற்றுக் கொண்டு அப்படியே வழங்குகிறோம். உண்மை என்ன? இந்து மதம் என்று ஒரு மதம் உண்டா? இந்து என்று ஓர் இனம் உண்டா? இல்லை: இல்லை. இந்து என்று ஓர் இனமும் இல்லை; இந்து மதம் என்று ஒரு மதமும் இல்லை.

பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு வந்த கிரேக்கர்கள் நம்மை இந்தப் பெயர் கொண்டு அழைத்தார்கள். சிந்து நதிக்கு அப்பால் இருந்தார்கள் அவர்கள். இப்பால் இருந்தவர்களை 'சிந்து சிந்து' என்று அழைத்தார்கள். 'சிந்து சிந்து' என்ற பெயர், நாளடைவில் 'ஹிந்து ஹிந்து' என்று வழங்கலாயிற்று. இன்றளவும் நாம் அதையே சொல்லிக் கொண்டு இருக்கிறோம்.

அப்படியானால் நாம் யார்? நமது மதம் யாது? நாம் எல்லாரும் வேதாந்திகள். நமது மதம் வைதிக மதம். வேதாந்தமே நமது மதம். வேதாந்தி, வைதிகன் என்பதன் பொருள் என்ன? வேதாந்தி என்றால் வேதவாக்கினை ஏற்றுக் கொள்பவன் என்று பொருள்; வைதிகன் என்றால் வேதம் காட்டும் பாதையில் நடப்பவன் என்று பொருள். எனவே இந்து என்று கூறும் பொழுது இந்தப் பொருளில் தான் நாம் அச்சொல்லை வழங்குகிறோம்.

வேதம் அநாதி. அதாவது ஆதி இல்லாதது. என்றும் இருப்பது; சாசுவதமானது; பல ஆயிரம் ஆண்டுகள் முன்பு நமது முன்னோர்களான மகரிஷிகள் உணர்ந்து வெளியிட்ட உண்மைகள். இந்த உண்மைகள் வழி வழியாக வாய் மூலம் வந்தவை. ஏட்டில் எழுதப் பெறாதவை. மகரிஷிகள் தங்கள்

சிஷ்யர்களுக்கு வேத சூத்திரங்களைச் சொல்லிக் கொடுத்தார்கள். அவர்கள் தங்கள் சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். இப்படியாக வாழையடி வாழையாக வேதத்தை மனனம் செய்து வந்தார்கள். அதாவது மனப்பாடம் செய்து வந்தார்கள். எவரும் ஏட்டில் எழுதிப் படிக்கவில்லை. அதனுலே வேதத்தை 'எழுதாக் கிளவி' என்று தமிழில் வழங்கினுர்கள். எழுதாக் கிளவி என்ருல் என்ன பொருள்? எழுத்தால் எழுதப்படாத சொல் என்று பொருள்.

'ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்' என்பது தமிழ் அறிவுரை. இதன் பொருள் என்ன? ஓதாமல் ஒரு ந[illegible] இருக்க வேண்டாம் என்று யாரை நோக்கிக் கூறினுர்? வேதம் ஓதுபவர்களை நோக்கிக் கூறினுர். வேதம் ஓத வேண்டும். தினந்தோறும் ஓத வேண்டும். ஓதுதல் என்பதன் பொருள் என்ன? வேத மந்திரங்களை - அவற்றின் சொற்களை - முறையோடு கூற வேண்டும். முறையோடு கூறுவதாவது என்ன? குரலை உயர்த்த வேண்டிய இடத்தில் உயர்த்தியும், தாழ்த்த வேண்டிய இடத்தில் தாழ்த்தியும், அழுத்த வேண்டிய இடத்தில் அழுத்தியும் ஸ்வரம் தப்பாது கூறுவதுதான் ஓதல் எனப்படும்.

இப்படியாக நாள்தோறும் வேதம் ஓதி இயற்கையோடு இசைந்து வாழ்ந்து இறைவனேடு இசைந்து வாழ்ந்தார்கள் நமது முன்னேர்களான: மகரிஷிகள். சன்மார்க்க நெறி நின்ருர்கள்.

வேதம் இரு பகுதிகள் கொண்டது. ஒன்று முன்பகுதி. மற்றும் ஒன்று பின்பகுதி. முன்பகுதி கர்ம காண்டம் எனப்பட்டது. பின் பகுதி ஞான காண்டம் எனப்பட்டது. கர்ம காண்டம் செயல் பற்றியது; ஞான காண்டம் அநுபவம் பற்றியது.

ஞான காண்டம் வேதாந்த பாகம் எனப்படும். வேதாந்தம் என்ருல் வேதத்தின் முடிபு என்று பொருள். அந்தம் என்ருல் முடிவு. அந்த முடிவை எங்கே காணலாம்? உப

நிஷதங்களிலே காணலாம். உபநிஷதங்கள் பேரின்ப நிலை பெறும் வழி கூறுகின்றன.

அவ்வழி அறிதல் எவ்வாறு? வழி அறிந்த ஒருவரே இன்னொருவருக்கு வழி காட்டுதல் இயலும். வழி அறிந்தோரே குருமார் எனப்படுவர். எனவே உபநிஷதங்களின் பொருளை உணர்ந்து பேரின்ப நிலை பெற வேண்டுமானால் குருவை நாட வேண்டும்.

உபநிஷதங்களின் பொருளை உணர்ந்து மற்றையோருக்கு உணர்த்திய குருமார் பலர். அவருள் ஒருவர் கௌடபாதர் என்பவர். கௌடபாதர் மாண்டுக்ய உபநிஷத்துக்கு விளக்கம் அருளியவர். இவ்விளக்கத்துக்கு 'மாண்டுக்ய காரிகை' என்று பெயர்.

இவரது சிஷ்யர் கோவிந்த பகவத்பாதர் என்பவர். நர்மதை நதிக் கரையில் யோகத் தவத்தில் அமர்ந்திருந்தார். அத்வைத வேதாந்த ஜோதியை உலகெங்கும் பரப்புதற்கேற்ற சிஷ்யர் ஒருவரை எதிர்நோக்கி இருந்தார். அதாவது இன்றைக்கு ஆயிரத்து இருநூறு ஆண்டுகள் முன்பு.



# சோதனை காலம்

**வே**த நெறி பற்றி வாழ்ந்த மக்களுக்கு ஒரு சோதனை காலம் வந்தது. அதாவது சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் முன்பு.

இப்போது வட பீகார் என்று கூறப்படும் பகுதியில் பஞ்சாயத்து ஆட்சி ஒன்று நடைபெற்று வந்தது. இந்தப் பஞ்சாயத்தின் தலைநகரம் வைசாலி எனப்பட்டது ஆட்சி புரிந்தவர் லிச்சவி வம்சத்தினர் ஆவர். வைசாலி, மூன்று பகுதிகள் கொண்டது. மூன்றில் ஒன்றுக்குக் குண்டக் என்று பெயர். இங்கே ஒரு க்ஷத்திரிய குடும்பம். அதிலே ஒருவர் தோன்றினர். அவர் பெயர் வர்த்தமானர் என்பது வர்த்தமானருக்கு மற்றொரு பெயரும் உண்டு மகாவீரர் என்பதே அப்பெயர்.

ஜைன மதத்தின் இருபத்து நான்காவது தீர்த்தங்கரர் இவர். இவருக்கு முன்பும் ஜைனமதம் இருந்தது. இருந்தாலும் அது ஒரு பெரிய சக்தியாக விளங்கவில்லை. அதனால் வைதிக தர்மத்துக்கு எந்தவிதமான இடையூறும் ஏற்படவில்லை. ஆனால் வர்த்தமானர் காலத்தில் ஜைன மதம் தளிர்விட்டுச் செடியாகிப் பெரிய மரமாகிவிட்டது பின்னே அது காடாகி நாடு முழுவதும் பரவி விட்டது.

சந்திரகுப்த மௌரியரின் ஆட்சிக் காலத்தில் இந்த ஜைன மதத்தை நாடு முழுவதும் பரப்பினர் அவர். ஜைன மதம் இரு கிளைகளாகப் பிரிந்தது. இரு கிளைகளில் ஒன்றுக்குப் பெயர் சுவேதாம்பர ஜைனம். இன்னொன்று திகம்பர ஜைனம். சுவேதம் என்றால் வெள்ளை என்று பொருள். அம்பரம் என்றால் ஆடை என்று பொருள். சுவேதாம்பரர் என்றால்

வெள்ளை ஆடை உடுத்துபவர் என்று பொருள். திகம்பர ஜைனரோ ஆடை இன்றி நிர்வாண கோலத்தில் விளங்குவர். இவ்விரு கூட்டத்தினரும் நாடு முழுவதும் புற்றீசல் போலத் திரிந்தனர். அதனால் வேதநெறி வாட்டமுற்றது ; நலிவுற்றது.

கிறிஸ்தவ சகாப்தத்தின் ஆரம்ப காலத்திலேயே ஜைன மதம் தமிழ் நாட்டில் தலை தூக்கத் தொடங்கி விட்டது. அப்போது தமிழ் நாட்டை ஆண்டு வந்த அரசர்கள் ஜைன மதத்துக்கு ஆதரவு அளித்தார்கள்.

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசர்கள் பல்லவர்கள். பல்லவ அரசர்களில் ஒருவன் மகேந்திரவர்மன். அவன் சம்ஸ்கிருதம் நன்கு பயின்றவன்; இசை வல்லவன்; சங்கீர்ணம் என்ற புதிய தாள வகை கண்டுபிடித்தவன்; சிற்பத்திலே சிந்தை பற்றியவன்; ஓவியத்திலே உளம் கொண்டவன். இவன் ஜைன மதத்தில் சேர்ந்தான்; அம்மதத்துக்குப் பேராதரவு அளித்தான்.

இவனது ஆட்சிக் காலத்திலே தென் ஆற்காடு ஜில்லாவில் உள்ள திருப்பாதிரிப்புலியூரிலே ஜைனமடம் ஒன்று புகழ் பெற்று விளங்கியது. சிம்மசூரி, சர்வநந்தி என்ற ஜைனப் புலவர்கள் சம்ஸ்கிருதத்திலும் பிராகிருதத்திலும் வல்லவர்களாக விளங்கினார்கள். இவர்களுக்கு ஆதரவு அளித்தான் மகேந்திரவர்மன்.

பாண்டிய நாட்டிலே களப்பிரர் ஆட்சி நடைபெற்றது. இவ்வரசர்கள் ஜைன மதத்துக்கு ஆதரவு அளித்தார்கள். கி. பி. 470ல் வச்சிரநந்தி என்பவர் மதுரையிலே தமிழ்ச்சங்கம் ஒன்று நிறுவினார். தமிழ் நூல்கள் வாயிலாக இவர்கள் தங்கள் மதத்தைப் பிரசாரம் செய்தார்கள்.

தமிழ் நாட்டிலே ஜைன மதத்தை வீழ்த்திய பெருமை இருவரையே சாரும். அவருள் ஒருவர் திருநாவுக்கரசர். இன்னொருவர் திருஞானசம்பந்தர். இவர்கள் செய்த போராட்டம்

தமிழ் நாட்டில் ஜைன மதத்தை வீழ்த்தியது; விரட்டியது. சிவமதம் தலை தூக்கியது; பக்தி பெருகிற்று.

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகிய இருவரும் சங்கரரின் முன்னோடிகள் ஆவர்.

**நே**பாள தேசத்தின் தாழ்வரையிலே மற்றொரு சிறு நாடு இருந்தது. அதன் பெயர் கபிலவஸ்து என்பது. கபில வஸ்துவை ஆண்டு வந்தவர் சுத்தோதனர் என்பவர். கபில வஸ்துவில் வாழ்ந்த மக்கள் சாக்கியர் எனப்பட்டனர். சாக்கியர் கௌதம கோத்திரத்தைச் சேர்ந்தவர்.

சுத்தோதனருக்கு ஒரு புதல்வர் பிறந்தார். சித்தார்த்தர் என்று அவருக்குப் பெயரிட்டார். இவரே பிற்காலத்தில் 'புத்தர்' என்று அழைக்கப்பட்டார். இவர் தோற்றுவித்த மதமே பௌத்தம் எனப்பட்டது. புத்தர் இந்நில உலகில் எண்பது ஆண்டுகள் வாழ்ந்தார்; தமது மதத்தைப் பிரசாரம் செய்தார்; மறைந்தார்.

கி. மு 272 முதல் தொடர்ந்து நாற்பது ஆண்டுகள் இந்திய நாட்டை ஆண்டவர் வலிமை மிக்க அசோக சக்கர வர்த்தி ஆவார். இவர், சந்திரகுப்த மௌரியரின் பேரர். தமிழ் நாடு நீங்கலாக உள்ள இந்தியா முழுவதும் இவர் அரசு புரிந் தார். பௌத்த மதத்துக்குப் பேராதரவு அளித்தார். அதனால் புத்தமதம் நாடு முழுவதும் பரவியது. அது மட்டும் அன்று. அசோகர், தமது மகன், மகள், முதலியோரை வெளிநாடு களுக்கும் அனுப்பினர்; புத்த மதத்தைப் பிரசாரம் செய்யச் சொன்னர். புத்த மதம் அரசாங்க மதமாயிற்று. அதனாலே பெரிதும் செல்வாக்குப் பெற்றது. வைதிக தர்மத்தின் வேர்க் கெல்லியாக விளங்கியது புத்தமதம்.

கி. பி. முதல் நூற்றாண்டில் இந்திய நாட்டின் வட பகுதி யில் ஆட்சி செலுத்தியவர் கனிஷ்கர்; இவர் கலைப்பித்தர். பல கலைகளுக்கும் இவர் ஆதரவு அளித்தார். இவரும் புத்த மதத் தையே பின்பற்றினர். ஆகவே புத்த மதத்துக்கு ஏற்றம்

ஏற்பட்டது. இவர் காலத்தில் புத்த மதம் இரண்டாகப் பிரிந்தது. ஒன்று மகாயான பௌத்தம்; மற்றொன்று ஹீனயான பௌத்தம். அசோகர் காலத்து புத்தமதம் மகாயானம் எனப்பட்டது. அசோகர் காலத்திலே புத்தர் ஒரு புதிய மதத்தின் தலைவராகவே கருதப்பட்டார். ஆனால் கனிஷ்கர் காலத்திலோ அவர் ஓர் அவதாரமாக்கப்பட்டார்; தெய்வமாக்கப்பட்டார். எங்கு நோக்கினும் புத்தருக்குக் கோயில்கள் எழுப்பப்பட்டன. விக்கிரகங்கள் வைக்கப்பட்டன. சிலைகள் எழுப்பப்பட்டன.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வட இந்தியாவில் ஆட்சி செலுத்தியவர் ஹர்ஷவர்த்தனர். இவரது ஆட்சிக் காலத்தில் நாட்டில் புத்தருக்குத் திருவிழாக்கள் நடத்தினர். பௌத்த சங்கங்களுக்குப் பேராதரவு அளித்தார். புத்தரைப் பற்றிய கதைகள் பல தோன்றின.

ஜைன மதமும் புத்த மதமும் ஆட்சி செலுத்தியதால் வைதிக தர்மம் மங்கியது; நிலை குலைந்தது.



# நலிவு சக்திகள்

**வே**த நெறி பற்றியவர்களுக்குள்ளே இரண்டு கட்சி. ஒன்று பூர்வ மீமாம்சகர் கட்சி. இன்னொன்று உத்தர மீமாம் சகர் கட்சி. பூர்வ மீமாம்சகர் என்ன கூறினர்? "வேத விதிப் படி கர்மாக்களைச் செய்தாலே போதும். கர்மம் செய்யும்படி தான் வேதங்கள் கட்டளை இடுகின்றன. ஆகவே கர்மாவே வேத முடிபு" என்று கூறினர்.

உத்தர மீமாம்சகர் என்ன கூறினர்? "கர்மம் செய்ய வேண்டியதுதான். ஆனால் அதுவே முற்ற முடிந்த முடிபு ஆகாது. கர்மாக்கள் என்ன செய்யும்? ஒருவரது மனத்தைப் பக்குவப் படுத்தும். அவ்வளவுதான். அதுவே முக்தி அளிக் காது. கர்மத்தின் மூலம் ஆத்ம ஞானம் பெற வேண்டும். அதுவே முக்தி அளிக்கும். ஆத்மஞானம் பெறுவதே வேதத் தின் முடிபு. இதுவே வேதாந்தம்" என்றனர்.

அந்தக் காலத்திலே பூர்வ மீமாம்சகர்களே அதிகம் இருந்தார்கள். செல்வாக்குப் பெற்றிருந்தார்கள். பெரிய பெரிய பண்டிதர் பலரும் பூர்வ மீமாம் சகராகவே இருந்தனர். உத்தர மீமாம்சகர் சிலரே இருந்தனர்; 'செல்வாக்கு இல்லாது இருந்தனர். வைதிக மதம் கர்ம காண்டத்துக்கே மதிப்பு அளித்து அவ்வளவில் நின்றது; ஞானகாண்டத்தை மறந்தது; புறக்கணித்தது.

அதனாலே வைதிக தர்மம் வளர்ச்சி குன்றியது; சவலை நோயுற்றது. இந்நோய் என்ன செய்தது? வைதிக தர்மத்தை உள்ளிருந்தே அரித்துக் கொண்டிருந்தது. புத்தமதம் ஜைன மதம் ஆகியவற்றின் தாக்குதலுக்கு ஓர் இலக்கும் ஆயிற்று.

இவை தவிர மற்றும் 92 வகையான மத வேற்றுமைகள் நாட்டிலே நிலவின. உலக மாதாவாகிய சக்தியை வழிபடு வோர் சாக்தர். சாக்தர் மூன்று வகையினர். தக்ஷிண மார்க்க சாக்தர் ; வாமாசார சாக்தர் ; கௌள மார்க்க சாக்தர்

இவருள் வாமாசாரரும் கௌளமார்க்கரும் செய்த அக்கிரமங்கள் கொஞ்ச நஞ்சம் அன்று. தெய்வத்தின் பெய ரால் மது அருந்தினர்; மாமிசம் தின்றனர்; பெண்களைப் பலி யிட்டனர். சொல்ல முடியாத அக்கிரமங்கள் பல செய்தனர்.

காபாலிகர் என்று ஒரு கூட்டம். :இவர்கள் மண்டை ஓடு களைக் கோத்துக் கழுத்தில் மாலையாகத் தரித்திருந்தார்கள்; மது அருந்தினுர்கள்; நர மாமிசம் தின்றுர்கள்: உடல் முழுவ தும் சாம்பல் பூசித் திரிந்தார்கள். ஆண் பெண் இருபாலாரும் வேற்றுமை இன்றித் திரிந்தார்கள்.

காலாமுகர் என்று ஒரு கூட்டம். இவர்கள் மண்டை ஓட் டில் உண்டார்கள்; மந்திரம் ஜபித்தார்கள்; உடலிலே பிணத் தின் சாம்பலைப் பூசித் திரிந்தார்கள்; மதுபானம் செய்தார்கள். தண்டம் ஏந்தித் திரிந்தார்கள்.

பைரவர் என்று ஒரு கூட்டம். கொடி பிடித்துத் திரிந் தார்கள். அதிலே நாய் பொறித்திருந்தார்கள். பைரவரே இவர்களது தெய்வம். தெய்வததின் பெயரால் அட்டுழியம் செய்த கூட்டத்திலே இதுவும் ஒன்று.

மல்லாரிகள் என்று ஒரு கூட்டம். இவர்கள் பெண்களைத் தூக்கிச் சென்று மலைமீதிருந்து கீழே உருட்டி விடுவார்கள் ; கொல்வார்கள்; தெய்வத்துக்குப் பூசையிடுவார்கள்.

இவ்வாறு பல்வேறு வகையாக நாடு நலிவுற்றது. இந்த நசிவு சக்திகளை எல்லாம் அடக்கி ஒடுக்கி, ஒழித்து விரட்டி, ஒப்பற்ற ஞான வேதாந்தத்தை நிலை நாட்டத்தக்க ஒரு மாபெரும் புரட்சித் தலைவரை நாடு எதிர்பார்த்துக் கொண்டு இருந்தது. அத்தகைய ஒருவரும் தோன்றினுர்.

அவரே ஆதி சங்கர பகவத்பாதர்.



# சங்கரர் வருகை

ஆயிரத்து இருநூறு ஆண்டுகள் முன்பு அவதரித்தார் ஸ்ரீசங்கர பகவத்பாதர். அவர் அவதரித்த புண்ணிய க்ஷேத்திரம் காலடி. இது, கேரள ராஜ்யத்திலே ஆலவாய்க்கு வடமேற்கே பன்னிரண்டு மைல் தூரத்திலே பெரியாற்றின் கரையிலே உள்ளது.

சங்கரர் தோன்றிய காலத்தில் காலடி என்பது ஒரு சிறு கிராமமாக இருந்தது. மொத்தம் பத்து வீடுகளே இருந்தன. அந்தக் காலத்திலே நம்பூதிரிகள் தான் கேரளத்திலே செல்வர்களாக இருந்தார்கள். எல்லாரும் சம்ஸ்கிருதம் நன்கு பயின்றவர்கள்; வல்லவர்கள்.

காணிப்பயூர் என்பது அந்தக் காலத்திலே புகழ் பெற்ற மனையாக விளங்கியது. இந்த மனையிலே பிரசித்தி பெற்ற சம்ஸ்கிருத பண்டிதர் ஒருவர் இருந்தார்; அந்தக் காலத்திலே கேரளத்திலே புகழ் பெற்ற மீமாம்சகர் இவர். இவர் பெயர் பிரபாகர் என்பது.

பூர்வமீமாம்சகர் என்று அந்தக் காலத்திலே புகழ் பெற்றிருந்த குமரில பட்டரின் சிஷ்யர் பிரபாகர்.* ஆனல் பிரபாகரோ குமரில பட்டரின் கொள்கையை ஒப்புக் கொள்ள மறுத்தார்; எதிர்த்தார்; இதனலே கீர்த்தி பெற்று

* KALADY - The Birth Place of Sri Sankara by Gurubhaktaratnam Sri K. R. Venkata Raman Page 20 Akhila Bharata Sankara Seva Samiti Publication.

விளங்கினுர். அந்தக் காலத்திலே இவருக்கு சிஷ்யர்களும் ஏராளமாகக் கேரளத்திலே இருந்தார்கள்.

கேரளம் மீமாம்ச பண்டிதர்களின் விவாத மேடையாக விளங்கியது. இந்த மாதிரியான சூழ்நிலையில்தான் சங்கரர் தோன்றினுர்.

சங்கரரின் தந்தையார் பெயர் சிவகுரு; தாயார் பெயர் ஆர்யாம்பாள். இவ்விருவரும் செய்த தவப்பயனுகத் தோன்றினுர் சங்கரர். சங்கரரின் தந்தையார் வேத சாஸ்திர விற்பன்னர். சங்கரரின் பாட்டனுரோ 'வித்யாதிராஜர்' என்று புகழப்பட்டவர்.

சங்கரர் தமது மூன்ருவது வயதில் தந்தையை இழந்தார். எனவே சங்கரரை வளர்க்கும் பொறுப்பைத் தாயாரே ஏற்க வேண்டியவர் ஆனுர்.

சங்கரருக்கு வயது ஐந்து ஆயிற்று. அவருக்கு உபநயனம் செய்யக் கருதினுர் தாய். உறவினரின் உதவி கொண்டு சங்கரருக்கு உபநயனம் செய்வித்தார். தக்கதொரு குருவிடம் சென்று கல்வி கற்கவும் ஏற்பாடு செய்தார். சங்கரரும் விரைவில் வேத சாஸ்திரங்களேக் கற்று விற்பன்னர் ஆனுர்.

சங்கரர் தோன்றிய குடும்பமோ வித்வான்கள் தோன்றிய குடும்பம்; சங்கரர் தோன்றிய கேரளபூமியோ வித்வான்கள் மலிந்த பூமி. பிறகு சொல்ல வேண்டுமா? சங்கரர் சிறு வயதிலேயே மாபெரும் பண்டிதராக விளங்கியதில் வியப்பு என்ன?



# பொன் மாரி

பவதி பிக்ஷாம் தேஹி! பவதி பிக்ஷாம் தேஹி! பவதி பிக்ஷாம் தேஹி!

இது ஒரு சிறுவனின் குரல். ஒரு முறை அன்று; இரு முறை அன்று; மும் முறை குரல் கொடுத்தான் சிறுவன்.

கேரளத்திலே ஒரு வீடு. சோம தேவர் என்பவர் அந்த வீட்டிலே வசித்து வந்தார். வேத சாஸ்திரங்கள் கற்றுணர்ந்தவர் அவர்; அந்தணர்; வறுமை வாழ்வை வலிந்து மேற்கொண்டவர். நாளை பற்றிய நினைப்பே சிறிதும் இல்லாதவர். நாள் தோறும் உஞ்ச விருத்தி எடுத்து வாழ்க்கை நடத்தி வந்தார்.

வழக்கம் போல அன்றும் உஞ்ச விருத்தியின் பொருட்டு வெளியே சென்றிருந்தார். அப்போது தான் சிறுவன் அந்த வீட்டின் முன் நின்று பிக்ஷை கேட்டான்.

சிறுவனின் குரல் கேட்டாள், இல்லாள்; வெளியே நோக்கினாள்; என்ன கண்டாள்? ஐந்து வயதுச் சிறுவன் ஒருவன் நிற்கக் கண்டாள்.

சின்னஞ் சிறு வயது. ஒளி வீசும் முகம். அகன்று பரந்த கண்கள். முப்புரி நூல் புரளும் மார்பு. இடுப்பிலே முழத் துண்டு; தலையிலே முன் குடுமி.

குருவை அடுத்துக் கல்வி பெறுகிறான் அச் சிறுவன். குரு குல வாசம் செய்யும் பிரம்மச்சாரிகளுக்குரிய விதிப்படி பிக்ஷை எடுத்துத் தன் பசி ஆற்றிக் கொள்கிறான்.

அந்த வழக்கம் பற்றி அன்று அவ் வீட்டின் முன் நின்றான்; குரல் கொடுத்தான். அதுவோ வறுமை தாண்டவமாடும் வீடு.

சோம தேவர் வீட்டில் இல்லை. வெளியே சென்றிருக்கிறார். நாலு அரிசி கொண்டு வந்தால் தான் வீட்டிலே அடுப்புப் புகையும். இன்றேல் புகையாது. பட்டினி தான். வீட்டில் மணி அரிசி கூட இல்லை.

சிறுவனுக்கு ஏதேனும் அளிக்க விரும்பினாள் சோம தேவரின் மனைவி. அவள் பெயர் தர்ம சீலை. உள்ளே சென்றாள்; வீடு முழுவதும் தேடினாள். ஒன்றும் கிடைக்கவில்லை; பிக்ஷைக்கு வந்த பிரம்மச்சாரிக்கு ஒன்றும் அளிக்க முடியவில்லையே என்று ஏங்கினாள்; கண்ணீர் சொரிந்தாள்; அங்கே ஒரு நெல்லிக் கனி இருக்கக் கண்டாள்; எடுத்தாள்; வந்தாள்; சிறுவனுக்கு அளித்தாள். நெல்லிக் கனியோடு ஒரு சொட்டுக் கண்ணீர்த் துளியும் முத்துப் போல அந்த பிக்ஷா பாத்திரத்தில் விழுந்தது.

அந்த அம்மையின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் சிறுவன்; நிலைமையை உணர்ந்தான். உள்ளம் கரைந்தான்; அவ்வீட்டின் வறுமை போக்க விரும்பினான்; உடனே லக்ஷ்மி தேவியைத் துதித்தான்.

தேவி என்ன செய்தாள்? சிறுவனின் வேண்டுதலை நிறைவேற்றினாள். அவ்வீட்டு முற்றத்திலே நெல்லிக் கனி மழை பொழிந்தாள்? எத்தகைய நெல்லிக்கனி மழை பொழிந்தாள்? பொன் நெல்லிக் கனி.



பிக்ஷை

இச்சிறுவன் தான் அத்வைத வேதாந்த ஒளி பரப்பிய ஸ்ரீ சங்கர பகவத் பாதர். இவர் அன்று திருமகளைத் துதித்த சுலோகங்கள் 'கனக தாரா ஸ்தோத்ரம்' என்று பெயர் பெற்று விளங்குகின்றன. கனகம் என்ருல் பொன். தாரா என்ருல் மழை என்று பொருள்.

சுவர்ண மழை பொழியப் பெற்ற அந்த இல்லம் இன்னமும் இருக்கிறது. காலடிக்குப் பதினெட்டு மைல் தூரத்திலே உள்ளது. 'சுவர்ணத்து மனே' எனும் பெயரால் அழைக்கப் படுகிறது. கேரளத்துப் பெரும் செல்வர் வீடுகளில் ஒன்ருக இன்றும் விளங்குகிறது.

# இளந் துறவி

சங்கரர் துறவு மேற்கொள்ள விரும்பினுர். ஆனுல் அவரது தாயார் அதற்கு இணங்கவில்லை. தாயாரின் சம்மதம் பெறுவது எப்படி? அதற்குரிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டு இருந்தார் சங்கரர்.

ஒரு நாள். ஆற்றில் நீராடிக் கொண்டு இருந்தார் சங்கரர். அவரது தாயும் அருகில் இருந்தார். முதலை ஒன்று சங்கரரின் காலைப் பற்றிக் கொண்டது.

"அம்மா!" என்று கூவினுர் சங்கரர். "காலை முதலை பற்றிக் கொண்டதே" என்று ஓல மிட்டார். "இப்போதாவது சந்நியாசம் மேற் கொள்ள அநுமதி கொடுங்கள். முதலை என் காலை விட்டு விடும். என்னைக் காப்பாற்றுங்கள்" என்ருர்.

தாயின் மனம் இளகியது. "எவ்வாறேனும் உயிருடன் இருந்தால் போதும்" என்று கருதினுர். எனவே, "சரி" என்ருர். அவ்வளவு தான். முதலை தன் பிடியை விட்டது.

கரை ஏறினுர் சங்கரர். தாயுடன் வீடு சென்ருர். உறவினரை அழைத்தார். அவர் தம் பாதுகாப்பில் தாயை ஒப்படைத்தார். தாயின் இறுதி காலத்தில் வருவதாக உறுதி கூறினுர்; வீடு துறந்தார்; ஊர் நீங்கினுர். பரிவ்ராஜகராகப் புறப்பட்டார். புறப்பட்டவர் எங்கு போனுர்? நர்மதை நதிக் கரை சேர்ந்தார்.

அங்கே யோகத் தவத்தில் அமர்ந்து இருந்த கோவிந்த பகவத் பாதரின் சிஷ்யர் ஆனுர். பகவத் பாதரிடம் உபதேசம் பெற்ருர்; துறவியானுர். தமது குருவின் விருப்பப்படி காசி நகரம் சென்ருர். எதற்காக? வேதாந்தப் பிரசாரம் செய்வதற்காக.

அந்தக் காலத்திலே வேத சாஸ்திரபண்டிதர்கள் காசியிலே தான் குழுமிருந்தார்கள். காரணம் என்ன ? அங்கே யுள்ள பண்டிதர்களுடன் விவாதித்து ஒவ்வொருவரும் தம் தம் கருத்தை வலியுறுத்துவர். அப்போதே அவர் சிறந்த பண்டிதர் என்று கருதப்படுவர்.

இந்த வழக்கத்தைப் பின்பற்றிச் சங்கரரும் காசி நகரம் சேர்ந்தார். பிறகு பதரிக்ஷேத்திரம் சென்று உபநிஷதங்கள் பிரும்ம சூத்ரம் ஆகியவற்றிற்கு விரிவுரை எழுதினர்.

அவர் தம் விரிவுரை சிறப்பு மிக்கது. தலை சிறந்த அறிஞர் களும் உச்சிமேல் வைத்து மெச்சிக் கொள்வது. வேதங்களிலே இவருக்கு இருந்த பயிற்சியும், ஆழ்ந்த அறிவும், தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டும் திறமையும் பிறவும், உள்ளங்கை நெல்லிக் கனிபோல் இவற்றில் காணப்படும்.



# குமரில பட்டர்

அந்தக் காலத்திலே பூர்வ மீமாம்சகர்களிலே தலை சிறந்து விளங்கியவர் குமரிலபட்டர் என்பவர். பூர்வ மீமாம்ச கரின் கொள்கைக்குத் தூண் போன்றவர். பூர்வ மீமாம் சகரின் கொள்கையைச் சங்கரர் ஏற்கவில்லை, எதிர்த்தார். எனவே குமரிலபட்டருடன் வாது செய்து வெற்றி பெற விரும்பினார்.

குமரில பட்டரின் கொள்கை தவறானது என்று நிரூபிக்க விரும்பினார். தூணைப் பிடுங்கிவிட்டால் கட்டடம் சரிந்து விழும் அல்லவா? குமரில பட்டரை வாதில் வென்று விட்டால் பூர்வ மீமாம்சகர் கூட்டத்தையே வென்றவர் ஆவார் அல்லவா ? எனவே குமரில பட்டரைத் தேடிச் சென்றார் சங்கரர்.

அப்போது பட்டர் பிரயாகையில் இருந்தார். ஒரு குழி தயாரித்து அதிலே இருந்து கொண்டு கழுத்து வரை உமியை நிரப்பி, அந்த உமிக்குத் தீ வைத்து, அத்தீயிலே வெந்து, உயிர் விடத் தீர்மானித்து இருந்தார் குமரில பட்டர்.

செய்தி கேட்டார் சங்கரர்; குமரிலபட்டர் இருந்த இடம் நோக்கி விரைந்தார். குமரில பட்டரைச் சந்தித்தார். உயிர் விடவேண்டாம் என்று தடுத்தார். தம்முடன் வாது செய்ய வருமாறு அழைத்தார். அப்போது குமரிலபட்டர் கூறினார்.

"இளமையிலே நான் வேதத்தின் சிறப்பை நிலை நாட்ட விரும்பினேன். புத்தக் கொள்கைகளைக் கண்டிக்க எண்ணி னேன். கண்டிப்பது எப்படி? அவற்றை நன்கு அறிந்த பின் அல்லவா கண்டிக்க வேண்டும்? எனவே, புத்த மதத்தில்

சேர்ந்தேன்; புத்த குருமாரிடம் பயின்றேன்; பிறகு அவர் மதங்களையே கண்டித்தேன். எனவே, குருத் துரோகம் செய்தவன் ஆனேன். அதற்குரிய பிராயச்சித்தம் இதுவே. ஆதலின் நீர் என்னைத் தடுக்க வேண்டாம். எனது சிஷ்யர் ஒருவர் இருக்கிறார். அவர் பெயர் விசுவரூபர் என்பது. அவர் மாகிஷ்மதி நகரில் இருக்கிறார். அவர் எனக்கு இணையானவரே. நீர் அங்கு செல்வீர். அவருடன் வாது செய்வீராக.''

இவ்வாறு கூறிவிட்டு உமித்தீயிலே உயிர் துறந்தார் குமரிலபட்டர்.



# மா பெரும் விவாதம்

குமரிலபட்டர் கூறிய சொற்களைக் கேட்டார் சங்கரர். புறப்பட்டார் மாகிஷ்மதி நகருக்கு. விசுவரூபரைத் தேடிச் சென்றார். விசுவரூபரைக் கண்டார்; வாதுக்கு அழைத்தார். விசுவரூபரும் வாதுக்கு இணங்கினர். வாதுக்கு மத்தியஸ்தர் ஒருவர் வேண்டுமே! எவரை மத்தியஸ்தராக வைப்பது? விசுவரூபரின் மனைவியான உபய பாரதியையே மத்தியஸ்தராக வைப்பது என்று இருவரும் முடிவு செய்தனர்.

உபய பாரதியோ சகல சாஸ்திர பண்டிதை. விசுவரூபருக்கு இணையானவர். சரஸ்வதி தேவியே உபய பாரதியாக அவதரித்திருக்கிறாள். எனவே, விசுவரூபரும் சங்கரரும் சரஸ்வதி தேவியையே தம் விவாத மத்தியஸ்தராக ஏற்றுக் கொண்டது முற்றும் சரிதானே!

விசுவரூபர் பிரும்ம தேவனின் அம்சம். சங்கரரோ பரமேசுவரனின் அம்சம் ஆகவே சங்கரரும் விசுவரூபரும் விவாதித்தது பரமேசுவரனும் பிரம்ம தேவனும் விவாதித்தது போலாகும் அன்றோ? எனவே, இவ்விருவரும் சரஸ்வதி தேவியின் அவதாரமாகிய உபய பாரதியை மத்தியஸ்தராக ஏற்றுக் கொண்டதில் வியப்பு என்ன?

உபய பாரதி என்ன செய்தார்? மலர் மாலைகள் இரண்டு கொண்டு வந்தார். ஒன்றைச் சங்கரருக்கு அளித்தார். மற்றொன்றை விசுவரூபருக்கு அளித்தார். அணிந்து கொள்ளுமாறு கூறினர்.

“எவருடைய மாலை முதலில் வாடுகிறதோ அவரே தோற்றவர் ஆவார்” என்றார் உபய பாரதி.

விவாதம் என்றால் அதற்கு ஒரு நிபந்தனை வேண்டும் அல்லவா? என்ன நிபந்தனை? விசுவரூபர் தோற்று விட்டால் அவர் துறவு மேற்கொள்ள வேண்டும். சங்கரர் தோற்றாலோ? அவர் துறவறம் நீங்கி இல்லறம் மேற்கொள்ள வேண்டும். இதுதான் நிபந்தனை. இந்த நிபந்தனையை இருவரும் ஏற்றுக் கொண்டனர்.

விவாதம் தொடங்கியது. ஒரு நாளா? இரண்டு நாளா? பதினேழு நாட்கள் தொடர்ந்து விவாதம் நடைபெற்றது. பதினேழாம் நாள் விசுவரூபர் அணிந்திருந்த மாலை வாடியது. சங்கரரே வெற்றி பெற்றார். விசுவரூபர் தோற்றார்; தமது தோல்வியை ஒப்புக் கொண்டார்; துறவு ஏற்கச் சித்தமானார்.

அப்போது உபய பாரதி என்ன சொன்னார்? சங்கரரின் வெற்றி பூரண வெற்றி ஆகாது என்றார். ஏன்? உபய பாரதியுடனும் வாது செய்து வெற்றி பெறவேண்டும். அப்போதே பூரண வெற்றியாகும். சங்கரர் பூரண வெற்றி பெற்றவர் ஆவார் என்றார் உபய பாரதி.

சங்கரரும் ‘சரி’ என்றார். உபய பாரதியுடன் வாது செய்ய முன் வந்தார்.

இல்லறம் பற்றிக் கேள்விகள் கேட்டார் உபய பாரதி. சங்கரரோ இளமையிலே துறவு பூண்டவர். இல்லறம் பற்றி அவர் விவாதிப்பது எப்படி? எனவே, முப்பது நாள் அவகாசம் கேட்டார் சங்கரர். உபய பாரதியும் இணங்கினார். இல்லறம் பற்றி அறிவது எப்படி? என்று எண்ணியவாறு புறப்பட்டார் சங்கரர்.



# கூடு விட்டுக் கூடு பாய்தல்

அமருகன் என்பவன் ஓர் அரசன். அவன் இறந்து போனுன். அரசனுக்குரிய மரியாதைகளுடன் அந்த உடலைக் கொண்டு வந்தார்கள். சுடு காட்டில் வைத்தார்கள்.

பார்த்தார் சங்கரர். அவருக்கு ஒரு யோசனை தோன் றியது. என்ன யோசனை ? கூடு விட்டுக் கூடு பாய்தல் என்பது ஒரு சித்தி. சிறந்த யோகிகள் இந்த சித்தி கைவரப் பெற்றவர் களாயிருப்பார்கள். சங்கரர் சிறந்த யோகீசுவரர் ஆனதாலே இந்த சித்தியில் வல்லவராக இருந்தார்.

கூடு விட்டுக் கூடு பாய்தல் என்ருல் என்ன ? கூடு என்பது இந்த உடல். அதை விட்டு மற்ருேர் உடலுக்குள் புகுந்து நடமாடும் சித்திக்குத் தான் கூடு விட்டுக் கூடு பாய்தல் என்று பெயர். இந்த சித்தியின் மூலம் அரசனின் உடலில் பிர வேசிக்க எண்ணினுர் சங்கரர். ஏன் ?

இறந்து போன அரசனின் உடலில் புகுந்து கொண்டால் என்ன நிகழும் ? அரசன் உயிர் பெற்று எழுவான். அது கண்டு மந்திரிகள் மகிழ்வார்கள். அரசனை அரண்மனைக்கு அழைத்துச் செல்வார்கள். அரண்மனையில் சில நாள் இருந்தால் இல்லற அநுபவம் ஏற்படும். பிறகு மீண்டும் தமது சந்நியாசி உடலில் புகுந்து கொண்டு உபய பாரதியுடன் விவாதம் செய்யலாம். இது தான் சங்கரரின் யோசனை இதனைத் தமது சிஷ்யர் பத்ம பாதரிடம் சொன்னுர். தமது சந்நியாச உடலைப் பத்திரமாகப் பாதுகாக்கும்படி பத்ம பாதருக்குக் கட்டளையிட்டார் ; அரச உடலில் புகுந்து கொண்டார்.

மறு கணம் அரசன் உயிர் பெற்று எழுந்தான். மந்திரிமார் மிக மகிழ்ந்தனர். அரசனை அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர்.

சங்கரரின் சிஷ்யரான பத்ம பாதர் தமது குருவின் சந்நியாசிக் கூட்டைப் பாதுகாத்து வந்தார்.

சில நாட்கள் சென்றன. அரசி என்ன கண்டாள்? உயிர் பெற்று வந்த அரசனின் நடை உடை பாவனைகளில் மாற்றம் கண்டாள். அவள் நல்ல மதியூகி; புத்திசாலி.

"இவர் நமது அரசர் அல்லர். அரசர் இறந்தது உண்மை. உயிர் பெற்று வந்தவர் அவர் அல்லர். எவரோ மகான் அவரது உடலில் புகுந்து வந்திருக்கிறார். எந்த நிமிஷமும் இவர் திரும்பிப் போய் விடுவார். அப்படிப் போக விடலாகாது" என்று முடிவு செய்தாள்; மந்திரியை அழைத்தாள்; தனது கருத்தைத் தெரிவித்தாள்.

மந்திரி என்ன செய்தார்? எங்கேயாவது இறந்த சரீரம் காணப் பட்டால் அதை உடனே நெருப்பில் போட்டு விட வேண்டும் என்று உத்தர விட்டார்.

அரசாங்க அதிகாரிகள் அந்த உடல் எங்கே என்று தேடிக் கொண்டு வந்தார்கள். சங்கரர் விட்டுச் சென்ற துறவிக் கூட்டைக் கண்டார்கள், தீயில் இட்டார்கள்.

உடனே பத்ம பாதர் இதைத் தமது குருவுக்குத் தெரிவித்தார். சங்கரர் என்ன செய்தார்? அரசனின் கூட்டை விட்டார். தமது சந்நியாசக் கூட்டில் புகுந்து எழுந்தார்.

அவ்வாறு எழுந்த சங்கரர் உபய பாரதியுடன் வாது செய்யப் புறப் பட்டார். இவரைக் கண்ட உடனேயே உபய பாரதி தமது தோல்வியை ஒப்புக் கொண்டார். விசுவரூபர் துறவறம் ஏற்க அநுமதி வழங்கினர்.

விசுவரூபரும் துறவு பூண்டார். சங்கரரின் சிஷ்யர் ஆனுர். தமது சிஷ்யர்களில் முதல்வராக அவரை ஏற்றுக் கொண்டார் சங்கரர் ; சுரேசுவரர் என்ற சந்நியாசப் பெயரும் சூட்டினுர்.

சரஸ்வதியின் அம்சமான உபய பாரதியிடம் ஒரு வரம் வேண்டினுர் சங்கரர். என்ன வரம் ? தாம் செல்லும் இடம் எங்கும் தம்மைத் தொடர்ந்து வர வேண்டும் என்பதே. தேவியும் அதற்குச் சம்மதித்தாள். ஆனுல் ஒரு நிபந்தனே.

என்ன அது ? சங்கரர் திரும்பிப் பாராமல் செல்ல வேண்டும். திரும்பிப் பார்த்தாலோ?

" அந்த இடத்திலேயே நின்று விடுவேன். பின் தொடர் ந்து வர மாட்டேன் " என்ருள் தேவி.

" சரி ; அப்படியே ஆகட்டும் ". என்ருர் சங்கரர். தமது சிஷ்யர்களுடன் யாத்திரை தொடங்கினுர். மேற்குத் தொடர்ச்சி மலேச் சாரல் வழியே நடந்து வந்தார்.

பின்னே, ' கலீர் கலீர் ' என்று கால் சிலம்பு ஒலிக்க வந்து கொண்டு இருந்தாள் அன்னே. எல்லாருமாக சிர்ங்க கிரி வந்து சேர்ந்தார்கள்.

சிர்ங்க கிரியின் இயற்கை வனப்பிலே மூழ்கினுர் சங்கரர். ஆங்கு ஓர் இடத்தில் சூல் கொண்ட தவளே ஒன்று வெயிலின் கொடுமை தாங்காமல் தவித்தது. அது கண்ட நல்ல பாம்பு ஒன்று தவளே மீது இரக்கம் கொண்டு படமெடுத்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்தது. மற்ருேர் இடத்தில் பசுவும் புலியும் சேர்ந்து நீர் குடிக்கக் கண்டார். தவ யோகியர்க்குத் தக்க இடம் அதுவே என்று கண்டார்.

அதுவரை அவரைத் தொடர்ந்து வந்த தேவியின் சிலம் பொலி கேளாதிருக்கவே சற்றுத் திரும்பினுர் சங்கரர். அவ்வளவில் நின்று விட்டாள் அன்னே. அங்கேயே பாறையில்

ஸ்ரீ சக்ரம் வடித்து சாரதா தேவி என்ற பெயரில் அன்னையை இருக்கச் செய்தார் சங்கரர். இதுவே சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடம்.

“ இந்த பீடத்தில் அமர்பவர் எவரே ஆயினும் அவர் நானே ஆவர் ” என்று அருள் புரிந்தாள் பிரம்ம வித்யா ஸ்வரூபிணி ஆகிய ஸ்ரீ சாரதா தேவி.



# சிஷ்யர் நால்வர்

சங்கரரின் சிஷ்யர் நால்வர். ஒருவர் சுரேசுவரர். இன்னொருவர் பத்ம பாதர். மற்றொருவர் ஹஸ்தாமலகர்; நான்காமவர் தோடகர்.

சங்கரர் காசியில் தங்கியிருந்த போது ஒருவர் அவருக்கு சிஷ்யர் ஆனார். அவர் பெயர் சனந்தனர். ஒரு நாள் சனந்தனரை அழைத்தார் சங்கரர்.

அப்போது சனந்தனர் எங்கு இருந்தார்? கங்கைக்கு அக்கரையில் இருந்தார். குருவின் குரல் கேட்டார் சனந்தனர். கங்கையில் இறங்கினார். நீரில் மூழ்கி விட்டாரா? இல்லை. அங்கே தாமரை மலர்கள் தோன்றின. அவற்றில் காலை வைத்துக் கங்கை ஆற்றைக் கடந்து வந்தார் சனந்தனர். அதனால் அவருக்கு பத்ம பாதர் என்று பெயர் சூட்டினார் சங்கரர். தமது குருவிடம் அளவு கடந்த பக்தி கொண்டவர் பத்ம பாதர்.

ஓர் இளைஞன். பார்வைக்கு ஊமையாக இருந்தான். என்ன செய்வது என்றே பெற்றோருக்குத் தெரியவில்லை. அவனை அழைத்துக் கொண்டு சங்கரரிடம் வந்தனர்; வணங்கினர்; விஷயத்தைக் கூறினர்.

சங்கரர் அவனைத் தம் அருள் கண்களால் நோக்கினார். ஊமை நீங்கச் செய்தார். "நீ யார்?" என்று கேட்டார். அவ்வளவு தான். இளைஞன் பதில் சொல்லத் தொடங்கினான். பன்னிரண்டு சுலோகங்களில் பதில் தெரிவித்தான்.





"நித்யமான ஸ்வப் பிரகாசமான ஆத்மா நான்" என்ருன். கேட்டார் சங்கரர். அந்த இளைஞனைத் தமது சிஷ்யனுக ஏற்ருர். ஹஸ்தாமலகர் என்று பெயரிட்டார். ஆமலகம் என்ருல் நெல்லிக் கனி. ஹஸ்த ஆமலகம் என்ருல் உள்ளங்கை நெல்லிக் கனி என்று பொருள். வேதாந்த தத்துவத்தை உள்ளங்கை நெல்லிக் கனி போல் பன்னிரண்டு சுலோகங்களில் கூறியதால் ஹஸ்தாமலகர் என்று அவருக்குப் பெயர்.

சங்கரருக்குத் தொண்டு செய்வதிலேயே பெரிதும் ஈடு பட்டிருந்தார் ஒருவர். அவர் பெயர் கிரி. வேதாந்த சாஸ்திரங் களில் அதிக விற்பத்தி இல்லாதவர் அவர். அதனுல் அவரை மற்றவர்கள் அலட்சியம் செய்தார்கள். இதை அறிந்தார் சங்கரர். எல்லா வித்தைகளிலும் கிரிக்கு அறிவு ஏற்படுமாறு அருளினுர்.

அதனுல் மகிழ்ச்சியுற்ருர் கிரி. தோடகம் என்ற விருத்தப் பாவினுல் தம் குரு நாதருக்கு நன்றி செலுத்தினுர். எனவே அவருக்குத் தோடகாச் சாரியார் என்ற பெயர் ஏற்பட்டது.



இந்த சிஷ்யர் நால்வருடனே சிர்ங்கேரியில் இருந்து கொண்டு அத்வைத வேதாந்த ஒளி பரப்பி வந்தார் சங்கரர் ; சிர்ங்கேரியில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கி இருந்தார். சிர்ங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தில் வீற்றிருந்து அத்வைத வேதாந்தப் பிரசாரம் செய்யுமாறு சுரேசுவராச்சாரியாருக்கு உத்தரவிட்டார்.

சுரேசுவரரும் சங்கரரின் கட்டளையை ஏற்று சிர்ங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தில் அமர்ந்தார்.

சிர்ங்கேரி ஸ்ரீ சாரதா பீடம் வியாக்யான சிம்மாசனம் என்றும், தக்ஷிணாம்னாய பீடம் என்றும் பெயர் பெற்றது.



# வேதம் நான்கு ; பீடமும் நான்கே

பாரத தேசம் வேதத் திரு நாடு அல்லவா ? எனவே இதை ஒரு யக்ஞ பூமியாகக் கருதினர் சங்கரர். எனவே நாட்டின் நான்கு திசைகளிலும் நான்கு பீடங்களை ஏற்படுத்தினர். வேதங்கள் நான்கு. பீடங்களும் நான்கே.

கிழக்கே பூரி ; மேற்கே துவாரகை ; தெற்கே சிர்ங்கேரி ; வடக்கே பத்ரிநாத்.

பூரியிலே ரிக்வேத பீடம்; துவாரகையில் சாம வேத பீடம்; பத்ரியில் அதர்வண வேத பீடம் ; சிர்ங்கேரியில் யஜுர் வேத பீடம். இப்படியாக நான்கு வேதங்களுக்கும் நான்கு பீடங்களை ஏற்படுத்தினர் சங்கரர். ஒவ்வொரு பீடத்துக்கும் ஒவ்வொரு சிஷ்யரை பீடாதிபதியாக்கினர். அத்வைத வேதாந்தப் பிரசாரம் செய்யுமாறு கட்டளையிட்டார்.

இதிலே சிறப்பு என்ன என்றல் இந்த நான்கு பீடங்களும் அமைந்த இடம் தான். இந்திய நாட்டின் பரப்பளவு சுமார் 1960 சதுரமைல். இதை நான்கு சம வட்டங்கள் ஆக்கினல் ஒவ்வொன்றும் 490 சதுரமைல் கொண்டதாயிருக்கும். இந்த முறையின் படி நான்கு பீடங்களும் அமைக்கப் பட்டுள்ளன எனலாம்.



# சிம்ம கர்ஜனை

ஒரு நாள். சங்கரர் யோகத்தவத்தில் அமர்ந்திருந்தார். அப்போது காபாலிகன் ஒருவன் வந்தான். காபாலிகர் என்போர் நரபலி இடுவார்கள். நர மாமிசம் உண்பார்கள். தங்கள் உடல் முழுவதும் சாம்பல் பூசித் திரிவார்கள். மண்டை ஓடுகளைக் கோத்து மாலையாக அணிவார்கள். ஆண் பெண் இரு பாலாரும் வேற்றுமை இன்றித் திரிவார்கள்.

இத்தகைய காபாலிகன் தான் சங்கரர் முன் நின்றான்; அமைதி கலைத்தான். சங்கரர் கண் திறந்து பார்த்தார். எதிரே காபாலிகன் ஒருவன் நிற்கக் கண்டார்.

"என்ன வேண்டும்?" என்று கேட்டார். "தாங்கள் துறவியல்லவா?" என்று கேட்டான் காபாலிகன்.

"ஆம்" என்றார் சங்கரர் "தங்களுக்குத் தங்கள் உடல் மீது பற்றுதல் இல்லை அல்லவா?" என்று கேட்டான் காபாலிகன்.

"இல்லை" என்றார் சங்கரர்.

"அப்படியானால் சரி. தங்கள் தலையை வெட்டி நான் கொண்டு போகிறேன்" என்றான் காபாலிகன்.

"ஆகட்டும்" என்றார் சங்கரர். மீண்டும் யோகத்தில் ஆழ்ந்தார்.

காபாலிகனுக்கு ஒரே மகிழ்ச்சி. துறவி; இளம் வயது; யோகி; வேத சாஸ்திரம் வல்லவர்; ஒளி வீசும் முகம். இத்தகைய ஒருவரின் தலை கிடைக்கிறது என்றால் மகிழ்ச்சி பொங்காதா? சங்கரரின் தலையை வெட்டி எடுத்துச் செல்லச்

சித்தம் ஆனுன். சற்றுத் தொலேவிலே ஆற்றில் நீராடிக் கொண்டு இருந்தார் பத்ம பாதர். திடீரென்று உணர்ச்சி வசம் ஆனுர். தமது குருவுக்கு ஏதோ ஆபத்து என்று உணர்ந்தார். அவர் நரசிம்ம உபாசகர். நரசிம்மம் அவரை ஆட் கொண்டது. அவ்வளவு தான். ஒரு குதி குதித்தார்; இரண்டு தாவல் தாவினுர்; குருவின் முன் வந்து நின்ருர். என்ன கண்டார்? காபாலிகனேக் கண்டார். கையில் கத்தியுடன் நின்ருன் காபாலிகன். குருவின் தலேயை எடுத்துச் செல்ல.

நரசிம்மம் கர்ஜித்தது. இரணியனேக் கொன்ற போது எவ்வளவு கோபாவேசம் கொண்டிருந்ததோ அவ்வளவு கோபாவேசத்துடன் இடித்து முழங்கியது; அந்த காபாலிகனே இழுத்துக் கொன்றது.

சங்கரர் கண்விழித்தார். நடந்தது அறிந்தார். லக்ஷ்மீ நரசிம்ம மூர்த்தியைத் துதித்தார்.



# அன்னையின் அந்திக் காலம்

அன்னை ஆர்யாம்பாளின் மரண காலம் நெருங்கியது. இதனை யோக சக்தியால் அறிந்தார் சங்கரர். அன்னைக்கு அளித்த உறுதி மொழியை நிறைவேற்றக் கருதினர். காலடிக்கு விரைந்தார். தாய் அருகில் அமர்ந்தார். இறைவனைத் துதித்தார். அமைதியாய், ஆனந்தமாய் அன்னை இவ்வுலகு நீத்தார்.

பின்னே தாய்க்கு ஈமக்கடன் செய்ய முற்பட்டார் சங்கரர். அவரது செயலை ஊரார் ஒப்பவில்லை ; ஒத்துழைக்க மறுத்தனர்.

" சங்கரர் துறவி. ஆதலின் தாய்க்கு ஈமக்கடன் செய்யக் கூடாது " என்றனர். சுடு காட்டில் இடம் அளிக்க மறுத்தனர்.

அப்போது அந்தக் கிராமத்திலே இருந்த வீடுகள் மொத்தம் பத்து. எட்டு வீட்டுக்காரர் எட்டிப் பார்க்கவில்லை. இரண்டு வீட்டுக்காரரே வந்தனர். என் செய்வார் சங்கரர்? தாயின் உடலைச் சுடு காட்டுக்கு எடுத்துச் செல்ல முடியாது. சுடு காட்டில் இடம் கொடுக்க மறுத்தார்கள் அல்லவா ? எனவே, வீட்டின் கொல்லைப் புறத்திலே தாயின் உடலை தகனம் செய்ய தீர்மானித்தார்.

கொல்லைப் புறத்திலே காய்ந்த வாழைப் பட்டைகளை அடுக்கினர். அதன் மீது தாயின் உடலை வைத்தார். உடலை எடுத்துச் செல்வது எப்படி ? இரண்டு மூன்று துண்டுகளாக உடலை வெட்டினர். எடுத்துச் சென்றார். தீ மூட்டினர்.

சங்கரருக்கு உதவ மறுத்தார்களே! அந்த நம்பூதிரிமாரின் மனைகள் இப்போது இல்லை. மறைந்து போயின.

ஆனால் சங்கரருக்கு உதவ எந்த இருவரின் மனைகள் மட்டும் இன்னும் இருக்கின்றன. அந்த இருவருள் ஒருவர் ஆர்யாம்பாளின் கால் அருகில் நின்றார். இன்னொருவர் தலைப் பக்கம் நின்றார். தலைப் பக்கம் நின்றவர் மனை தலையாட்டும் பள்ளி என்று வழங்கப் படுகிறது. கால் அருகில் நின்றவரது மனை காப்பில்லி இல்லம் என்று வழங்கப் படுகிறது

இங்கே உள்ள நம்பூதிரிமார்கள் இறந்தவர்களைச் சுடு காட்டுக்கு எடுத்துச் செல்வது இல்லை. கொல்லைப் புறத்தில் வாழைப் பட்டைகளின் மீது வைத்தே தீ மூட்டுகிறார்கள். தீ மூட்டு முன் ஒரு கத்தியால் அந்த உடலைத் தடவுகிறார்கள்.



காலடியில் அன்னையின் ஆலயம்

# முடிவுரை

சங்கரர் இந் நில உலகில் வாழ்ந்த காலம் முப்பத்திரண்டே ஆண்டுகள். இதில் எட்டு வயது வரையில் காலடியில் வாழ்ந்திருக்கிறார். மீதி இருபத்து நான்கு ஆண்டுகள். நர்மதை நதிக்கரையில் நான்கு ஆண்டுகளும் காசியில் நான்கு ஆண்டுகளும் வாழ்ந்ததாக வைத்துக் கொண்டாலும் எஞ்சியிருப்பவை பதினாறு ஆண்டுகள். இந்தப் பதினாறு ஆண்டுகளில் அவர் செய்த காரியம் பெரிது ; பெரிது ; மிகப் பெரிது. மனித சக்திக்கு அப்பாற் பட்டது.

இந்தப் பதினாறு ஆண்டுகளில் அவர் இந்த நாடு முழுவதும் சுற்றினார். மதத்தின் பெயரால் நடந்த அக்கிரமங்களை எல்லாம் நிறுத்தினார். தெய்வத்தின் பெயரால் நடந்த நர பலியை நிறுத்தினார். நாட்டை நலிவுறச் செய்த தீய சக்திகளை எல்லாம் விரட்டினார். ஜைனம், புத்தம் ஆகிய மதங்களை ஒடுக்கினார். வேத நெறியைச் சுற்றிப் படர்ந்திருந்த பாசிகளை விலக்கினார் ; தூசுகளை எல்லாம் தட்டினார். மாசுகளை எல்லாம் களைந்தார். அத்வைதத்தை நிலை நாட்டினார். தெய்வ வழிபாட்டுக்கு ஆறு முறைகளை வகுத்தார். ஷண்மத ஸ்தாபகர் என்ற பெயர் பெற்றார்.

அவரது காலம் எத்தகையது ? விரைவாகச் செல்லும் வாகனங்கள் உண்டா ? இமைப் போதில் உலகெங்கும் பிரசாரம் செய்யக் கூடிய வசதி உண்டா ? ஒன்றும் இல்லை. இவ்வளவு வசதிகளை வைத்துக் கொண்டு ஏதோ ஒரு சிறு காரியம் செய்து விட்டாலும் அவரை வானளாவப் புகழ்கிறோம். அப்படி இருக்க; தலை கொண்டு போகிற எதிர்ப்புகளுக்கிடையே எவ்வித வசதியும் இன்றி ஒருவர் நாடு முழுவதும் சுற்றியிருக்கிறார்.

அந்தக் காலத்திலே எங்கு பார்த்தாலும் தார் போட்ட நல்ல ரோடுகளா இருந்தன ? மலையும், காடும் மேடும் கடந்து நடந்து அல்லவா ஊர் ஊராகச் சுற்ற வேண்டும் ? வழியிலே தான் எத்தனை எத்தனை ஆறுகள் ! அவற்றைக் கடந்து செல்வது சுலபமா ? ஒரு கரையிலிருந்து மற்றொரு கரை சேர எவ்வளவு நாள் ஆயிற்றோ ?

சென்ற இடம் தோறும் பண்டிதர்களைப் பார்த்து விவாதம் செய்து அவர்களை வெற்றி கொண்டு தமது கொள் கையை நிலை நாட்ட வேண்டும்.

இந்த மகத்தான செயலைச் செய்து முடித்தார் சங்கரர். தமது 32 வது வயதில் கேதாரநாத்தில் நிஜரூபத்தில் கைலாசத்துக்குச் சென்றார்.

அகில இந்தியா என்றும் இந்திய ஒருமைப் பாடு என்றும் இந்நாளில் எங்கும் பேசுகிறார்கள். ஆனால், ஆயிரத்து இரு நூறு ஆண்டுகள் முன்பே அகில இந்திய ஒருமை கண்டவர் ஆதி சங்கரர் ஒருவரே. காச்மீரம் முதல் கன்னியா குமரி வரை உள்ள இந்த பாரத பூமியை உயரிய வேதாந்த தத்துவ ரீதியில் - அந்த அடிப்படையில் – ஒருங்கு இணைத்தவர் ஆதி சங்கரர்.

அரசியல் பலமோ ஆட்சி பலமோ படை பலமோ கொண்டு அவர் நாட்டை ஒருங்கிணைக்கவில்லை. தண்ட கமண்டலமும் காவி உடையும் ஆத்மிக ஞானமும் கொண்டு இந்த நாட்டை அவர் ஒருங்கிணைத்தார். வயது முப்பத்திரண்டு. முப்பத்திரண்டே ஆண்டுகள் வாழ்ந்தார். இவ்வளவு குறுகிய காலத்தில் அவர் செய்த காரியமோ இமயம் போன்றது.





மகா சந்நிதானம் அவர்களும், சந்நிதானம் அவர்களும்



# அத்வைத அருள் ஜோதி
# ஸ்ரீ சங்கர பகவத் பாதர்

சக்திதாசன். ஜலஜா